PHONE No. 55630

தனி இதழ்
ஒரு அணு
இலங்கையில் 10 சதம்

மலர் 1] [இதழ் 144

# நம் நாடு

தி.மு.க. தினஇதழ் ஆசிரியர். அண்ணதுரை

"THE NAM NADU" A TAMIL DAILY : THE OFFICIAL ORGAN OF: THE D.P.F.

[redacted]

சந்தா விபரம்
உள்நாடு (இலங்கை உட்பட)
ஆண்டு ரூ. 24—0—0
6 மாதம் ரூ. 12—0—0
3 மாதம் ரூ. 6—0—0
வெளிநாடு:
ஆண்டு ரூ. 30—0—0
6 மாதம் ரூ. 15—0—0
3 மாதம் ரூ. 7—8—0

சென்னை : கார்த்திகை 13உ சனி (28—11—53) ☆ ☆ ☆ வெளியூர் : கார்த்திகை 14உ ஞாயிறு (29—11—53)

# அள்ளித் தெளித்த அவசரக்கோலம்!

## "மாணவர்களைக் கூட்டுவதே புதிய திட்டத்தின் மூலக் கருத்து!"

## அரசியல் சட்டக் கண் கொண்ட அளவு கல்விக் கண் கொள்ளத் தவறினர்!

### 'குறைந்த செலவில் கல்வி' என்ற சி. ஆர். கூற்றுக்கு ஆய்வுக் குழு மறுப்பு!

### பாருலேகர் குழுவை நியமித்த சி. ஆர். உள் எண்ணம் நிறைவேறியது!

சென்னை, நவ. 27

"மாணவர்கள் எண்ணிக்கையை இரண்டு மடங்கு செய்வதே புதிய கல்வித் திட்டத்தின் முக்கியமான குறிக்கோள்."

"பள்ளி ஆசிரியர்களின் சம்பளத்தைத் தாமதமின்றி உயர்த்த நடவடிக்கையை முதலில் செய்யவேண்டும். அப்போதுதான் வேலையில் ஊக்கமும் உற்சாகமும் ஆசிரியர்களிடையே ஏற்படும். நிதிநிலைக்கு ஏற்றவாறு ஆசிரியர்கள் சம்பளத்தை உயர்த்தவேண்டியது மிகவும் முக்கியமான முதல் விடயங்களில் ஒன்று. எது முடியுமோ அதை ஆசிரியர்களுக்கு உடனடியாகச் செய்யவேண்டும்."

"பள்ளி சென்று படிக்கும் ஒவ்வொரு குழந்தையும், பள்ளிக்கூடத்திற்கு அதிகதூரம் செல்லாமல் இருக்க மாகாணம் முழுவதிலும் பள்ளிகள் உள்ள இடங்களைச் சரிகட்டிக் கொள்ளவும், புதுப்பள்ளிகளை அமைக்கும் இடங்களை நிர்ணயிக்கவும் வேண்டும். இதைத் திட்டமிட்டுச் செய்யவேண்டும். திட்ட அடிப்படையில் தொடக்கக் கல்வியைப் பரப்ப வேண்டிய அவசியம்."

"தொடக்கக் கல்வியின் பிரச்சினைகளை அதிக விஞ்ஞான முறையிலும், பரந்த அளவிலும் ஆராய கல்வித் துறைத் தலைமை அதிகாரி (டி. பி. ஐ.) அலுவலகத்திலும், பல்கலைக் கழகத்திலும் ஆராய்ச்சித் துறைகளை ஏற்படுத்த வேண்டும்."

—இவ்வாறு, சென்னை அரசாங்கத்தின் புதிய கல்வித் திட்டத்தை அறிவிக்கும்படி நியமிக்கப்பட்ட பேராசிரியர் பாருலேகர் குழு சிபார்சில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இப்புதிய கல்வித் திட்டத்தை சில காங்கிரசுக்காரர்கள் உட்பட பலர், பல்வேறு காரணங்களை வைத்து எதிர்த்தனர். இத்திட்டத்தைப்பற்றி ஆராய்ந்து நிபுணர் குழு முடிவு செய்கிறவரையில் திட்டம் அமுல் செய்வதை நிறுத்தி வைக்கும்படி சட்டசபையில் மொத்தத்தில் மூன்றிலிரண்டு பகுதியினர் வாக்களித்தனர். இதையொட்டியே பேராசிரியர் பி. வி. பாருலேகர் தலைமையில் நிபுணர் குழு ஒன்றை சென்னை அரசாங்கம் நியமித்தது.

ஆனால் இக்குழுவின் முடிவு தெரியும்வரை திட்டம் அமுல் செய்யப்படுவதை அரசாங்கம் நிறுத்தி வைக்கவில்லை.

இக்குழுவில், சென்னை அரசாங்க முன்னாள் கல்வித் துறை தலைமை அதிகாரி டாக்டர் பி. எல். டே, டில்லியில் உள்ள ஜும்மா மில்லியா அணைவேந்தர் எம். முஜிப், சென்னை அரசாங்கத்தின் கல்வித் துறை தலைமை அதிகாரி எஸ். கோவிந்தராஜநாயுடு (இவர் தற்போது ஆந்திராவில் பணியாற்றுகிறார்.) ஆகியோர் உறுப்பினர்களாக இருந்தனர்.

இக்குழு விசாரணை செய்யும்படி கூறப்பட்ட விடயங்கள் வருமாறு:—

"சென்ற ஆண்டுவரை மாகாணத்தில்கிலவியிருந்த தொடக்கக் கல்விமுறையைப் பரிசிலனை செய்யவேண்டும். இக்கல்வியின் தரத்தை எப்படி வளர்ப்பது என்பதையும், இக்கல்வி கற்கும் மாணவர்களின் எண்ணிக்கையை எப்படி அதிகரிக்கும்படி செய்வதென்பதையும்

(3-ம் பக்கம் பார்க்க)

## நவம்பர் 30-ல்!

☆

தோழர்கள்
அண்ணதுரை
சம்பத்
நெடுஞ்செழியன்
நடராசன்

ஆகிய நால்வருக்கும் காலை 9 மணிக்கு சென்னை சிறைவாயிலில் மகத்தான வரவேற்பு

அன்று மாலை 5 மணிக்கு, சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில் மாபெரும் விடுதலை விழாக் கூட்டம்

☆

### தோழர் மதியழகன்

மூன்று மாத சிறை தண்டனை அனுபவித்துவரும் ஐவரில் ஒருவரும், தி. மு. கழகத் துணைச் செயலாளருமான தோழர் கே. ஏ. மதியழகன் அவர்கள், செப்டம்பர் மாதம் 20-ந் தேதியிலிருந்து அக்டோபர் மாதம் 1-ந் தேதிவரை (சட்டப் படிப்புப் பரீட்சை எழுதுவதற்காக) பரோலில் வெளி வந்திருந்ததால், மேற்படி 10 நாட்களையும் தொடர்ந்து சிறையில் கழித்துவிட்டு, 10-12-53-ந் தேதி அன்று விடுதலையாவார்.

## நவம்பர் 29-ல்!

☆

### தோழர் மு. கருணாநிதி

☆

29—11—53 ஞாயிறு மாலை 2 மணிக்கு எழும்பூர் ரயில் நிலையத்தில் வரவேற்கப்பட்டு, ஊர்வலமாக அழைத்துச்செல்லப்படுவார்.

மாலை 5 மணிக்கு, எழும்பூர் ஆங்கிரி திடலில் (டி. பி. ஆஸ்பத்திரி அருகில்) வரவேற்புக் கூட்டம் நடைபெறும்.

## ஆதாரக் கல்வி முறையால் ஏற்படப் போகும் அபாயம்

### கல்வி அமைச்சர்கள் எதேச்சாதிகாரப் போக்கிற்கு அதிருப்தி

கல்வித்துறை முதியவர் பரான்ஞ்சபாய் தெளிவுரை

சங்கிலி, நவ. 26—

"இப்பொழுது பகிட்சார்த்தமாக கையாளப்பட்டுவருகிற ஆதாரக் கல்வி, நாட்டு முன்னேற்றத்திற்கு பெருங்கேடாக விளங்கும் என்பது மெய்ப்பிக்கப்படும்."

—இவ்வாறு, பூனா கல்வித்துறை முதியவரான டாக்டர் ஆர். பி. பரான்ஞ்சபாய், தனது கருத்தைக் கூறி இருக்கிறார். அவர் மேலும் கூறியதாவது:—

"ஆதாரக் கல்வி குறித்துப் பலர் பரவலாக இந்த நாட்களில் பேசிக்கொண்டபோதிலும், அந்தக் கல்வியின் உண்மை நிலை என்ன என்பது அதனைப் போதிப்பவர்கள் கூட புரிந்துகொண்டு இருப்பதாகத் தெரியவில்லை. அதில், அவர்களுக்கு நம்பிக்கையும் இல்லை. அதுபற்றி அவர்கள் கொண்டுள்ள கருத்தை வெளிப்படையாகக் கூறாதது, சர்க்கார் அதை பரீட்சார்த்தமாக அமுல் நடத்துவதில் காட்டும் ஆர்வமே காரணமாகும்."

விடுதலை அடைந்துள்ள இந்தியாவின் தேவைக்கேற்ற கல்விச் சீர்திருத்தம் செய்யப்பட வேண்டியது முக்கியம்தான். ஆனால், இப்பொழுது மேற்கொள்ளப்பட்டிருக்கிற ஆதாரக் கல்வி முறை அதற்குத் தகுந்த பதில் கூறுவதாக

(3-ம் பக்கம் பார்க்க)

## ஐதராபாத் அமைச்சர் குழு மீது லஞ்சக் குற்றச்சாட்டு!

— (:) —

### இதை விசாரிக்க காங்கிரஸ் பார்லிமெண்டரி குழுவிற்கு அருகதை இல்லை

பொது விசாரணை தேவை என்று மக்கள் ஜனநாயகக் கூட்டணியின் கோரிக்கை

ஐதராபாத், நவ. 26—

ஐதராபாத் அமைச்சர் குழு மீது சுமத்தப்பட்டுள்ள லஞ்சக் குற்றச்சாட்டுகளை விசாரித்து, 'வீண் புகார்' என்ற முடிவு கட்டிய காங்கிரஸ் பார்லிமெண்டு குழுவின் போக்கிற்குக் கண்டனம் தெரிவித்தும், காங்கிரஸ் குழு ஒரு கட்சிக் குழுவே அல்லாது வேறு இல்லை என்று விளக்கியும், குற்றச் சாட்டுகளை பாரபட்சமற்ற பொதுமக்கள் குழு விசாரித்து முடிவுகூற வேண்டும் என்றும், மக்கள் ஜனநாயகக் கூட்டணி தீர்மானங்கள் நிறைவேற்றி இருக்கின்றன.

விசாரணை நடத்திய காங்கிரஸ் பார்லிமெண்ட் குழுவின் நோக்கமே, ஐதராபாத் ராஜ்யத்தை மொழிவழியில் பிரித்து அமைப்பதற்கும், மொழிவழி மாநிலங்கள் அமைவதைத் தடுத்து நிறுத்துவதற்கும் எதிராக இப்போது இருக்கும் கெடுமதிகொண்ட காங்கிரஸ் அமைச்சர் அவையின் பிடியைப் பலம் பெருக்

(3-ம் பக்கம் பார்க்க)

# கல்லக்குடி அறப் போராட்ட வழக்கு

## வழக்கறிஞர்களின் வாதம்

திருச்சி, நவ. 28—

24—11—53 காலை 11 மணிக்கு, திருச்சி சப்-டிவிஷனல் மாஜிஸ்திரேட் திரு. கே. ராதாகிருஷ்ண மேனன் முன்னிலையில், கல்லக்குடி அறப் போராட்ட வழக்கு, விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. எல்லாத் தோழர்களும் நீதி மன்றத்தில் இருந்தனர். மூன்னாள் விசாரணையில், எல்லாத் தோழர்களின் வாக்குமூலங்களும் பதிவு செய்யப்படுவது முடிவடைந்து விட்டதால், இன்று, வழக்கறிஞர்களின் வாதம் தொடங்கியது :—

தோழர்களின் சார்பில் வழக்கறிஞர் திரு. எம். கலிலே அனந்தர் செய்த வாதமாவது :—

“நான், கோர்ட்டார் அவர்களை எதிரிகள்மீது குற்றப் பத்திரிகை வாசிக்குமுன்பே விடுதலை செய்து விடும்படி கேட்கவில்லை; ஆனால், சாட்சிகளின் சாட்சியத்திலிருந்து எதிரிகளின் மேல் சுமத்தப்பட்டிருக்கும் இ. பி கோ. 147, 149, 332 சட்டங்களும், ரயில்வே சட்டமான 122, 128 பிரிவுகளும் பொருந்துமா என்று கோர்ட்டார் கவனிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.”

“தி. மு. கழகம் நடத்திய போராட்டம், டால்மியாபுரத்தை, ‘கல்லக்குடி’ என்று மாற்ற வேண்டுமென்று செய்த போராட்டம்; அவர்கள் ஏற்கனவே திட்டமிட்டபடி, அவர்களின் கொள்கையை மக்களும், அரசியலாரும் நன்கு கவனிக்கும்படி செய்யவே, செயல் ரூபமான போராட்டம் நடத்தினார்கள் ஆனால், தி. மு. கழகத்தின் திட்டத்தில், ரயிலை நிறுத்திப் பொது மக்களுக்கு இடையூறுகள் செய்ய வேண்டுமென்றோ, அரசாங்க உத்தியோகஸ்தர்களைத் தாக்க வேண்டுமென்றோ, அவர்களை வேலை செய்யும்போது தடை செய்ய வேண்டுமென்றோ இல்லை.

“சாத்வீகமான முறையில், டால்மியாபுரத்தை ‘கல்லக்குடி’ என்று பெயர் மாற்றும் போராட்டத்தை, ‘டால்மியாபுரம்’ என்ற பெயர்ப் பலகையில், ‘கல்லக்குடி’ என்ற பெயர்த் தாளை ஒட்டுவதன் மூலமும், நேரு ‘நான் சென்ஸ்’ என்றதைக் கண்டிக்க, ரயிலை நிறுத்தி, ரயில் தண்டவாளத்தில் உட்காருதல் என்ற இரண்டேதான் தி. மு. கழகத்தின் போராட்டத் திட்டங்கள்.

“தி. மு. கழகத்தினர், டால்மியாபுரத்தில், சாத்வீகமான முறையில் அறப்போர் நடத்தினார்கள். போர் முறை, இந்நாட்டில் 40 ஆண்டுகளாகக் கையாளப்பட்டு வருகிறது. டால்மியாபுரத்தில் பகல் 1-40 மணி வரை எல்லா நிகழ்ச்சிகளும் ஒருவித கலவரமுமின்றி நடந்திருக்கிறது.”

“முதலாவது சாட்சியான அரியலூர் டிப்டி கலெக்டரே கூறுகிறார்: காலையில் இரண்டு தடவையும் நடந்த கூட்டத்தாரைச் சட்ட விரோதமானவர்கள் என்று நிர்மாணிக்கவில்லை” என்கிறார்; ‘கூட்டத்தினர் நன்முறையில் நடந்து கொண்டனர்” என்கிறார்.

“11-30 மணிக்கு டால்மியாபுரம் தொழிலாளர்களும் சேர்ந்தனர்; கூட்டம் 2000 பேர் ஆகக் கூடியது. பகல் 1-30 மணிக்கு கூட்டம் 2000-மாக இருந்தது. அரியலூர் டிப்டி கலெக்டர் அந்தக் கூட்டத்தில் உள்ள மக்களிடம் பிரயாணச் சீட்டு இருக்கிறதா என்று பரிசோதிக்க ஆரம்பித்தார். அந்தச் சமயம் நெருக்கடி ஏற்படவே தடியடிப் பிரயோகத்தை மிதமாகப் பிரயோகித்திருக்கிறார். அதனால் கலவரம் [illegible] விழுந்திருக்கின்றன. பிறகு தடிப் பிரயோகம் நடந்திருக்கிறது. தி. மு. கழகத்தினர், கற்களை எறியும் திட்டத்தினர் அல்லர்; சர்க்காரும் கூட்டத்தினரை அவ்விதம் செய்யும்படி செய்திருக்கிறது.”

“இவர்களை முன் இரு தடவை கைது செய்ததுபோல் கைது செய்திருக்கலாம்; ஆனால், அதற்கு பதிலாக தடியடிப் பிரயோகம் செய்திருக்கிறார்கள். தி. மு. கழகத்தினர் எந்தப் பலாத்காரச்செயலையும் செய்யவில்லை. அவர்கள் திட்டம் சாத்வீகமானதே; அவர்கள், தங்கள் திட்டம் பலருக்குத் தெரியவேண்டுமென்பதற்காகவே போராட்டம் நடத்தினர்.”

“ரயில்வே சட்டப்படி, ரயில் தண்டவாளத்தில் உட்கார்ந்து, பொது மக்களுக்கும், பிரயாணிகளுக்கும் இடையூறு செய்வது அவர்கள் திட்டமல்ல. சாட்சிகள் கூற்றிலிருந்து, கூட்டத்தினரில் பெரும்பாலோரும் தண்டவாளத்தில் அமர்ந்திருக்கின்றனர். அப்பாக்கிப் பிரயோகத்தால் இருவர் இறந்தும், பலர் அபாயகரமாக காயமும் அடைந்திருக்கிறார்கள். இவ்விதம் போலீசார் செய்தது தவறு இல்லையென்று முடிவு செய்ய, இவ்வழக்கு இல்லை என்று கூறவேயோ, தி. மு. கழகத்தினர் எந்தக் குற்றமும் செய்யத் திட்டமிடவில்லை என்பதைக் கூற ஆசைப்படுகிறேன்.

“தி. மு. கழகத்தினர், ரயில் தண்டவாளத்தில் தங்கள் கொள்கையை வெளிக்காட்டவே உட்கார்ந்ததால், ரயில்வே சட்டம் 122, 128-ன் கீழ் இவர்களைக் குற்றவாளிகளாகக் கருதக் கூடாது.

“தி. மு. கழகத்தினர் எந்த ஆயுதமும் தாங்கிப் போகவில்லை; ஆகையால், அவர்கள் மீது இ. பி. கோ. 147 சட்டத்தைச் சுமத்தக் கூடாது. அரசாங்க உத்தியோகஸ்தர்களைத் தாக்கவோ, அவர்கள் வேலை செய்யும்போது தடை செய்யவோ, ஒருமித்து, தி. மு. கழகத்தினர் டால்மியாபுரம் செல்லவில்லை; ஆகையால், அவர்கள் மீது இ. பி. கோ. 332, 149 சட்டப்படி குற்றவாளிகள் எனத் தீர்மானிக்கக் கூடாது. கல்லால் அடித்ததை, யார், யாரை அடித்தார்கள் என்று தனிப்பட்ட முறையில் நிர்மாணிக்க முடியாமலிருக்கிறது. குற்றப் பத்திரிகையில், இந்த எதிரிகளுடன் மற்ற கூட்டத்தினர் 2,000 பேர்களையும் எதிரிகளாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆகையால், கூட்டத்தில் தி. மு. கழகத்தினர் இருந்தார்கள் என்றதால், கூட்டத்தால் விளைவிக்கப்பட்டவைகளுக்கு தி. மு. கழகத்தினர்மீது குற்றம் சுமத்தக்கூடாது.”

### சர்க்கார் வழக்கறிஞர் விவாதம்

சர்க்கார் வழக்கறிஞர் திரு மகாதேவ சாஸ்திரியார் பின் விவாதித்ததாவது :—

“குற்றப் பத்திரிகையில், 147, 332, 337 கூட 149 இ. பி. கோ., 120, 128 ரயில்வே சட்டப்படி எதிரிகள்மீது குற்றம் சுமத்தப்பட்டிருக்கிறது. சாட்சியங்களிலிருந்து, 15—7—53-ந் தேதி எதிரிகள் டால்மியாபுரத்தில் இருந்திருக்கிறார்கள் என்று திட்டமாகக் கூறுகிறேன். 13, 14, 23, 24 எதிரிகளைத் தவிர மற்ற எல்லா எதிரிகளும் தாங்கள் டால்மியாபுரத்தில் 15-7-53-ந் தேதி இருந்திருக்கிறோம் என்கிறார்கள். 16, 21, 23, 24 எதிரிகளைத் தவிர மற்றவர்கள் அப்பாக்கிப் பிரயோகத்தால் காயமடைந்திருக்கிறார்கள். இவர்களுடைய காயங்களுக்கு மருத்துவ அத்தாட்சிகளும் தாக்கலாகியிருக்கின்றன. இதனால் எதிரிகள் டால்மியாபுரத்தில் அன்று இருந்திருக்கிறார்கள் என்று நிச்சயமாகிறது. அதோடு மல்லாமல் 23, 17-வது எதிரிகள் லால்குடி ரயில்வே நிலையப் புகார் புத்தகத்தில் காயப்பட்டவர்களின் பெயர்களைக் குறித்திருப்பதால், இவர்களும் டால்மியாபுரத்தில் இருந்திருக்கிறார்கள் என்றாகிறது.

“ரயில்வேநிலையத்தில் பெருந்திரளாகக் கட்டுப்பாடான, சட்ட விரோதமான கூட்டமாகத்தான் கூடியிருக்கிறார்கள். முதல் இரண்டு நிகழ்ச்சிகள் கலவரமின்றி நடந்தாலும், பகல் 1-50 மணிக்கு 2,000 பேர்கள் கூட்டமாகக் கூடி ‘ராஜாஜி ஒழிக! போலீசு ஒழிக,’ என்று கூச்சலிட்டுக் கலவர மனப்பான்மையுடனிருந்ததால் அரியலூர் டிப்டி கலெக்டர் கூட்டத்தைச் சட்ட விரோதமான கூட்டமென்று தீர்மானித்திருக்கிறார். மேலும் கற்களை எறிந்து போலீசுக்காரர்களைக் காயப்படுத்தியும், அவர்களை வேலை செய்ய முடியாதபடியும் செய்திருக்கிறார்கள். இவர்கள் திட்டப்படி, ‘கல்லக்குடி’ என்ற பெயர்த் தாளை, இரு பெயர்ப் பலகைகளிலும் ஒட்டிய பிறகு அவர்கள் தங்கியிருப்பதாலும், இவர்கள், கலக நிமித்தம் கூடியிருக்கிறார்கள் என்று நிச்சயமாகிறது. இதனால் இவர்கள் மீது ஏற்பட்டிருக்கும் இ பி கோ. 147, 143 சட்டப்படி குற்றங்கள் மெய்ப்பிக்கப்பட்டிருக்கின்றன.

“14—7—53-ந் தேதி, லால்குடியில் நடந்த பொதுக்கூட்டத்தில் 1-வது எதிரியும், 23-வது எதிரியும் கலந்து கொண்டிருக்கிறார்கள். இதற்கு போலீசு சப்-இன்ஸ்பெக்டர் தாக்கல் செய்திருக்கும் விளம்பர அறிக்கைகள் சாட்சிகளாக உள்ளன.

“அந்த விளம்பரத் தாள்களில், ‘போராட்டம்’ என்று உபயோகப்பட்டிருக்கிறது. போராட்டம் என்றால், சாத்வீகமான என்று பொருள்படவில்லை; பலாத்காரமான நடவடிக்கை யென்றுதான் பொருள் படுகிறது.

“கல்லடியால் போலீசுக்காரர்கள்தான் காயப்பட்டிருக்கிறார்கள்; தி. மு. கழகத்தினருக்கோ, எதிரிகளுக்கோ கல்லடியால் காயமில்லை; ஆகையால், எதிரிகள், போலீசைக் கல்லாலடித்ததால், இ. பி. கோ. 332 சட்டப்படி எதிரிகள்மீது குற்றம் மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

“ரயில்வே தண்டவாளத்தில் இருமுறை உட்கார்ந்தவர்களை இருமுறை கைது செய்தோம்; ஆனால், 3-வது தடவை பெருந்திரளாகக் கூட்டம்கூடி ரயில்வே தண்டவாளத்தில் உட்கார்ந்த போது, அவர்களைக் கைது செய்யப் போதிய போலீசார் என்னிடம் அப்போது இல்லை,’ என்று அரியலூர் டிப்டி கலெக்டர் சாட்சியத்தில் கூறியுள்ளார். அரசாங்கத் தரப்பில் உத்தியோகஸ்தரல்லாத பொதுமக்களாகச் சாட்சிகள் 12, 13, 17, ஆகியவர்கள், டால்மியாபுரத்தில் நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றிச் சாட்சியம் கூறியிருக்கிறார்கள்.”

பிறகு கீழ்கண்டவாறாக எதிரிகள் மீது குற்றப்பத்திரிகை வாசிக்கலாம் என்று கூறினார் :—

“எல்லா எதிரிகள் மீதும் இ பி. கோ 147-வது சட்டத்தையும், 9, 13, 22, 24 எதிரிகள் மீது இ. பி கோ 332-வது சட்டத்தையும்; 17லிருந்து 23-வது எதிரிகள் வரை 332-வது சட்டத்தையும், இ பி. கோ. 114-வது சட்டத்தையும், 1-லிருந்து 8 10, 11, 12, 14, 16, 18-லிருந்து 21-வது எதிரிகள் வரை இ. பி. கோ. 332, இதனுடன் 149-வது சட்டத்தையும்; மேலும், 1, 11, 14, 16, 17-லிருந்து 21 வரையுள்ள எதிரிகள்மீது 126-வது ரயில்வே சட்டத்தையும் சுமத்தலாம்” என்றார்.

* * *

சர்க்கார் தரப்பு வழக்கறிஞரின் வாதத்திற்குப் பதில் கூறும் முறையில், எதிரிகளின் வழக்கறிஞர் திரு வி. வாசுதேவ அனந்தர் விவாதித்ததாவது :—

“போராட்டம் என்றால், பலாத்கார நடவடிக்கை என்று கூட்டு வார்த்தை கூறுவது தவறு என்றும், சாத்வீக முறையில் சத்யாக்கிரகம் செய்வதற்கே போராட்டம் என்று தமிழ் வார்த்தை கூறுவது வழக்கமாக நம் நாட்டில் நீண்டகாலமாக இருந்து வருகிறது.

“சட்ட விரோதமான கும்பல் என்று கூறும்போது, சர்க்கார் வழக்கறிஞர் காட்டிய சட்டங்கள், கொலை வழக்கில் குற்றவாளிகள் அடங்கிய நிர்மாணமான கூட்டத்தைப் பற்றியது; இதுபோன்ற 2000 பேர் கூட்டத்தில் நடந்துள்ள நிகழ்ச்சிக்கு அவை பொருந்தக் கூடாது” என்றார்.

நீதிபதி, வழக்கை 30-11-53க் தேதிக்கு ஒத்தி வைத்துள்ளார்.

## ஐவர் விடுதலை—

### வரவேற்பு பாராட்டு இதழ்

‘30—11—53ல், சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில் நடக்க இருக்கும் வரவேற்பு கூட்டத்தின் போது, தி. மு. கழகத் தலைவர்கள் ஐவருக்கும் “பாராட்டு இதழ்,” சிறந்த ஆர்ட் தாளில், ஐவரின் அழகிய படங்களுடன், கண்ணையும் கருத்தையும் கவரும் முறையில் தயாரிக்கப்பட்டுத் தோழர்களுக்குக் குறைந்த கட்டணத்திற்கு தரப்பட இருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்,” என சென்னை மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் கண்ணபிரான் அறிவிக்கிறார்.

## ‘எனது பதவி ஏற்பை அல்லாடி காணாதது எனக்குத் துக்கமாக இருக்கிறது’

### கே. உமாமகேஸ்வர அய்யர் நீதிபதியானார்!

சென்னை, நவ 26—

உயர்நீதி மன்றத்தின் நீதிபதியாக ஏற்கனவே நியமனம் செய்யப்பட்டுள்ள கே. உமாமகேஸ்வர அய்யர், இன்று பிரமாணம் செய்து பதவியில் அமர்ந்தார்.

அவரைப் பாராட்டிப் பேசிய அட்வகேட் ஜெனரல் வி கே. திருவேங்கிடாச்சாரியார், ஆந்திராவிற்குத் தனி உயர்நீதி மன்றம் தேவை என்று தீர்மானித்த பிறகு முதல் முதலாக நீதிபதியாகப் பதவியேற்பவர் அய்யர்தான் என்று குறிப்பிட்டு, அவருடைய ஆற்றல் பற்றிப் புகழ்ந்து கூறினார்.

அதற்குப் பதில் சொல்லும் வகையில், ‘என்னைப் பாராட்டிய திருவேங்கடாச்சாரியாரும், காலஞ் சென்ற அல்லாடியிடம் பயிற்சி பெற்றவர்தான் என்றும், தம்முடைய சீடர்கள் பதவி பெற்றதைக் காணுவதற்கு அல்லாடி இல்லாமல் போனது வருந்தக்கூடிய விஷயமாகும்’ என்றும் புதிய நீதிபதி உமாமகேஸ்வர அய்யர் குறிப்பிட்டார்.

## கருணாநிதி நிகழ்ச்சிகள்

★

நவ. 29: சென்னை
டிச. 2: வாணியம்பாடி
5: கோவை
6: தஞ்சை
13: மதுரை

★★★★★★★★★★★

## சென்னை 37-வது வட்ட தோழர்களுக்கு

“சென்னை இராயப்பேட்டை தி. மு. கழக 37-வது வட்டத்தின் சார்பில், கல்வித் திட்ட எதிர்ப்பு மறியலிலும், கண்டனக் கூட்டம் நடத்தியும் சிறை சென்று மீண்ட தோழர்களுக்கு, 29—11—53 ஞாயிறு காலை 9 மணிக்கு கழகக் கட்டிடத்தில் தோழர் எஸ். சுந்தரம் தலைமையில் பாராட்டுக் கூட்டம் நடைபெறும். 37வது வட்ட கழகத் தோழர்கள் அனைவரும் கலந்து கொள்ளுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்” என்று செயலாளர் அறிவிக்கிறார்.

## சென்னை 6-வது வட்ட தி. மு. கழக உறுப்பினர்களுக்கு

கழக இல்லத்தில் 29—11—53 ஞாயிறு காலை 9 மணியளவில் ‘பொது உறுப்பினர் கூட்டம்’ நடைபெறும். அதுபோது எல்லா உறுப்பினர்களும் தவறாது கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்,” என்று செயலாளர் அறிவிக்கிறார்.

## தூத்துக்குடி - சதி வழக்கு நிதி

### ‘பராசக்தி’ மூலம் வரவு

சென்னை, நவ 28—

தூத்துக்குடி சதி வழக்கு நிதிக்காக சென்னை 9-வது வட்ட தி. மு. கழக சார்பில், 22-11-53 ஞாயிறு காலை 10 மணிக்கு சென்னை சினிமா சென்ட்ரல் தியேட்டரில் ‘பராசக்தி’ திரையிடப்பட்டது.

| | |
|---|---|
| வரவு—டிக்கெட் விற்பனை (வரி நீங்கலாக) | 364-7-6 |
| நன்கொடை மூலம் | 87-11-0 |
| மொத்த வரவு | 452-2-6 |
| செலவு — மொத்த செலவு | 179-9-0 |
| செலவு நீங்க வரவு | 272-9-6 |
| 9-வது வட்ட தி மு. கழக நன்கொடை | 27-6-6 |
| நிதிக்காக அளிக்கப் படும் தொகை | 300-0-0 |

ரூ. 300-ம் தூத்துக்குடி நிதிக்குக் கொடுக்கப்படும்.

★

## நன்றி

சென்னை 9-வது வட்ட தி. மு. கழகச் சார்பில், தூத்துக்குடி சதி வழக்கு நிதி வசூலுக்காக, நேஷனல் பிக்சர்ஸ் கம்பெனியார், தமது ‘பராசக்தி’ படத்தை 22-11-53ல், சென்னை சினிமா சென்ட்ரலில் காட்சிக்குக் கொடுத்து உதவியமைக்காக நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம் என்று தூத்துக்குடி நிதி வசூல் பொறுப்பாளர் அறிவித்துக் கொள்கிறார்.

திராவிட [illegible] அச்சகத்தில் [illegible] செல்வன், [illegible] (காஞ்சிபுரம்) வெளியிடப்படுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணாதுரை, எம். ஏ.

